

ஜகத்குரு காஞ்சிகாமகோடி பீடாதிபதி
ஸ்ரீஸ்ரீஸ்ரீ சந்த்ரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அருளிய

ஸ்ரீ ப்ரம்ம வித்தை (எ)

# காயத்ரி மஹாத்மியம்

# ஸ்ரீ ஸுப்ரமண்ய புஜங்கம்



ஓம் ஐம்கார ஹ்ரிம்கார ரகஸ்ய யுக்த
ஸ்ரீம்கார கூடார்த்த மஹா விபூத்ய
ஓம்கார மர்ம ப்ரதி பாணிப்யாம்
நமோ நமோ ஸ்ரீ குருபாதுகாப்யாம் !

ஓம்




ஜகத்குரு காஞ்சிகாமகோடி பீடாதிபதி
ஸ்ரீஸ்ரீஸ்ரீ சந்தரசேகரேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் அருளிய

## ஸ்ரீ ப்ரம்ம வித்தை (எ)

# காயத்ரி மஹாத்மியம்



# காயத்ரீ

'காயந்தம் த்ரயேதே யஸ்மாத் (இ)த்யபிதீயதே'

"காயத்ரீ" என்றால் எவர் தன்னை கானம் பண்ணு கிறார்களோ அவர்களை ரக்ஷிப்பது என்று அர்த்தம்.

'கானம்' பண்ணுவதென்றால் இங்கே பாடுவ தில்லை; பிரேமையுடனும், பக்தியுடனும் உச்சரிப்பது என்றே அர்த்தம்.

யார் தன்னை பயபக்தியுடனும், பிரேமையுடனும் ஜபம் பண்ணுகிறார்களோ அவர்களை காயத்ரீ மந்திரம் ரக்ஷிக்கும். அதனால் அந்தப் பெயர் அதற்கு வந்தது. வேதத்தில் காயத்ரீயைப் பற்றிச் சொல்லும் பொழுது:

"காயத்ரீம் சந்தஸாம் மாதா"

– என்று இருக்கிறது.

சந்தஸ் என்பது வேதம். "வேத மந்திரங்களுக் கெல்லாம் தாயார் ஸ்தானம் காயத்ரீ" என்று வேதமே சொல்லுகிறது.

24 அக்ஷரம் கொண்ட காயத்ரீ மந்திரத்தில் ஒன்றொன்றும் எட்டெழுத்துக் கொண்ட மூன்று பாதங்கள் இருக்கின்றன. அதனால் அதற்கு 'த்ரி பதா' காயத்ரீ என்றே ஒரு பெயர் இருக்கிறது.

இந்த ஒவ்வொரு பாதமும் ஒவ்வொரு வேதத்தின் ஸாரம். அதாவது ரிக், யஜுர், ஸாமம் என்ற மூன்று வேதங்களையும் இறுக்கிப் பிழிந்து கொடுத்த essence (ஸாரம்) காயத்ரீ மஹா மந்திரம். அதர்வத்துக்குத் தனி காயத்ரீ இருக்கிறது.

இரண்டாவது உப்நயனம் செய்துகொண்டே அதை உபதேசம் பெறவேண்டும்.

த்ரிப்ய ஏவது வேதேப்ய; பாதம் பாதமதூவஹம்
(மிநுஸ்மிருதி)

காயத்ரீ மூன்று வேதத்திலிருந்து ஒவ்வொரு பாதமாக எடுத்தது என்று மநுவே சொல்கிறார். வேதத்தில் மற்றதையெல்லாம் விட்டுவிட்ட நாம் இதையும் விட்டால் வேறு கதி ஏது?

சாஸ்திரப் பிரகாரம் செய்ய வேண்டிய காரியங்களுக் கெல்லாம் முக்கியமான காரியம் காயத்ரீ ஜபம்.

மந்திர சக்தி குறையாமல் இருக்க தேஹத்தை சுத்தியாக வைத்துக்கொள்ள வேண்டும்.

## வேதியரின் தேகத்தூய்மை

தேஹோ தேவாய : ப்ரக்தோ ஜீவ : ப்ரோக்தோ ஸநாதன :

தேகம் ஒரு தேவாலயம். அந்த ஆலயத்துக்குள் இருக்கிற உயிரான ஜீவன் ஈச்வர ஸ்வரூபம்.

ஆலயத்தில் அசுத்தியோடு போகக்கூடாது. அங்கே அசுத்தமான பதார்த்தங்களைச் சேர்க்கக் கூடாது. மாம்ஸம், சுருட்டு முதலியவைகளைக் கொண்டு போனால் அசுத்தம் உண்டாகும்.

ஆகம சாஸ்திரங்களில் தீட்டோடும், தேக அசுத்தத்தோடும் ஆலயத்துக்குப் போகக்கூடாது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

அப்படியே மனித தேகம் ஒரு தேவாலயமானால் அதிலும் அசுத்தமான பதார்த்தங்களைச் சேர்க்கக் கூடாது. மந்திரசக்தி இருக்கிற தேகத்தில் அசுத்த மானவைகளைச் சேர்த்தால் அது கெட்டுப்போய்விடும்.

வீட்டுக்கும் தேவாலயத்திற்கும் வித்தியாசம் இருக் கிறது. வீட்டிலும் அசுத்தம் பண்ணக்கூடாது; ஆனாலும் தேவாலயத்தைப் போல அவ்வளவு கடுமையாக அசுத்தம் வராமல் வைத்துக்கொள்ள வேண்டிய தில்லை. ஒரு மூலையிலாவது வாய் கொப்புளிக்கவும், ஜலமல விஸர்ஜனத்துக்கும், பஹிஷ்டா (மாதவிடாய்) ஸ்திரீக்கும் இடம் வைக்கிறோம். (Flat system-த்தில் கடைசி சொன்னது போய், அநாசார மயமாகி விட்டிருக் கிறது.) இதற்கெல்லாம் ஆலயத்தில் கொஞ்சங்கூட இட மில்லையல்லவா?

ஒரு தேசத்தில் வீடுகளும் வேண்டும், ஆலயங்களும் வேண்டும். அதே மாதிரி ஜனசமூகத்தில் லோக காரியங்களைச் செய்யும் வீடு மாதிரியான தேகங்கள், ஆத்மகாரியத்தைச் செய்யும் ஆலயம் மாதிரியான தேகங்கள் இரண்டும் வேண்டும்.

தேகங்களுக்குள் ஆத்மாவை ரக்ஷிப்பவை தேவா லயத்தைப் போலப் பாதுகாக்கப்பட வேண்டிய பிராம்மண தேகங்கள். இவ்வாறு வேதமந்திர சக்தியை ரக்ஷிக்க வேண்டியவைகளாதலால் ஆலயம் போல் அதிக பரிசுத்தமாக அந்த தேகங்கள் இருக்க வேண்டும்.

அசுத்தியான பதார்த்தங்களை உள்ளே சேர்க்கக் கூடாது. மந்திர சக்தியை ரக்ஷித்து அதனால் லோகத்துக்கு நன்மையை உண்டாக்க வேண்டுவது பிராம்மணன் கடமை. அதனால்தான் அவனுக்கு அதிகமான நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருக்கின்றன.

'மற்றவர்கள் அது பண்ணுகிறார்கள்; நாமும் ஏன் பண்ணக்கூடாது?' என்று அசுத்தியைத் தரும் காரியங்களை பிராமணன் பண்ணக்கூடாது. அவர்களெல்லாம் சரீரத்தை வைத்துக்கொண்டு ஸந்தோஷமான அநுபவங்களை அடைகிறார்களே என்று இவனும் தகாதவற்றைச் செய்யக்கூடாது.

பிராம்மணனுக்கு தேஹம் ஸந்தோஷத்தை அநுபவிப்பதற்காக ஏற்பட்டதல்ல. லோக உபகாரமாக வேதத்தை ரக்ஷிக்க வேண்டிய தேகம் அது. அதற்காகத்தான் செலவு பண்ணி உபநயனம் முதலியவைகளைச் செய்து கொள்வது.

வேதமந்திரங்களை ரக்ஷிப்பதற்காகவே - அதன் மூலம் ஸகல ஜீவ ஜந்துக்களையும் ரக்ஷிப்பதற்காகவே - அதை வைத்துக்கொள்ள வேண்டும். 'எல்லோரும் ஸௌகரியமான தொழில் பண்ணுகிறார்களே! பணம்

சம்பாதிக்கிறார்களே! ஏன் நாம் செய்யக் கூடாது?' என்று பிராம்மணன் நினைக்கக் கூடாது. தன்னுடைய கடமையை நன்றாகச் செய்துவிட்டுப் பிறகுதான் ஜீவனோபாயத்தை நினைக்க வேண்டும்.

முன்பு இவன் பிராம்மண தர்மங்களைச் செய்தாலே போதுமென்று ராஜாவும் சமூகமும் இவனுக்கு மானியம், சம்பாவனை செய்து வாழ வசதி தந்தார்கள். இப்போது நிலைமை மாறிவிட்டதால், பணத்துக்கும் கொஞ்சம் பிரயத்தனப்பட வேண்டியதுதான். ஆனால் நிரம்ப பணத்தை சம்பாதிக்க வேண்டுமென்று ஆசைப் படக் கூடாது; இதற்காக அநாசார வழிகளில் பிரவேசிக்கக் கூடாது.

பிராம்மணர்களுக்குத் தரித்திர நிலை வேண்டியது தான். இன்பங்களைத் தேடாமல் காயக் காயக் கிடந்தால்தான் இவனுக்கு ஞானப் பிரகாசம் உண்டாகும். அதனால் லோகம் வாழும்.

கண்ட தேசங்களுக்குச் சென்று ஆசார அநுஷ்டானங்களை விட்டுவிட்டு சம்பாதிக்கிற ஐசுவரியம் இவனுக்கு வேண்டாம். அப்படி சம்பாதிக்காவிட்டால் ஒன்றும் முடியாது என்பது இல்லை. லோகத்தில் மந்திர சக்தியைக் காப்பாற்றிக் கொண்டு தன்னுடைய தர்மத்தை அநுஷ்டிப்பது முதல் கடமை. பணம் சம்பாதிப்பது இரண்டாவது (Secondary) தான்.

மந்திர சக்தி என்ற அக்கினியை இவன் காப்பாற்றிக்கொண்டு வந்தால் அது எல்லோருக்கும் க்ஷேமத்தை உண்டாக்கும்.

லோகத்தில் எவருக்குக் கஷ்டம் வந்தாலும் அதை நிவர்த்திக்கும் சக்தி பிராமணனுக்கு மந்திர சக்தியின் மூலம் இருக்க வேண்டும். யாராவது கஷ்ட காலத்தில் வந்து பிரார்த்தித்தால், ''நீ பண்ணுவதைத்தான் நானும் பண்ணுகிறேன். உனக்கு இருக்கிற சக்திதான் 'எனக்கும் இருக்கிறது'' என்று ஒரு பிராமணன் சொன்னால் அவனுடைய ஜன்மா வீண்.

மந்திர சக்தியாகிய அக்கினி இப்பொழுது பெரும்பாலும் அணைந்திருக்கிறது. பிராம்மண தேகம் விகாரம் ஆகிவிட்டது. அதில் அசுத்தமான பதார்த்தங்கள் சேர்க்கப்படுகின்றன. ஆனால், ஒரு பொறி மட்டும் அணையாமல் இருக்கிறது. அதை விருத்தி பண்ண வேண்டும். அப்படிச் செய்தால் எப்பொழுதாவது பற்றிக்கொள்ளும்.

அந்த நெருப்புப் பொறிதான் காயத்ரீ. அது பரம்பரையாக வந்திருக்கிறது.

## காயத்ரீ மந்திர மகிமை

மூன்று தலைமுறையாக காயத்ரீயை விட்டுவிட்டவன் பிராம்மணனாக மாட்டான். அப்பேர்ப்பட்டவர்கள் இருக்கிற தெரு அக்கிரஹாரம் ஆகாது. அது குடியான வர் தெருதான். ஆனால் இன்னும் மூன்று தலைமுறை ஆகவில்லை. ஆகையால் இன்னும் பிராம்மணர்கள் என்று பெயராவது சொல்லலாம் என்று நினைக்கிறேன்.

மூன்று தலைமுறை யக்ஞும் இல்லாவிட்டால் அவன் துர்ப்பிராம்மணன்; கெட்டுப்போன பிராம்மணன். கெட்டாலும் ''பிராம்மணன்'' என்ற பேராவது

இருக்கிறது - மறுபடியும் பிராம்மணனாவதற்குப் பிராயச்சித்தம் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆனால் காயத்ரீயை மூன்று தலைமுறையாக விட்டு விட்டால் பிராம்மணத்வம் அடியோடு போய்விடு கிறது. அவன் மறுபடியும் பிராம்மணனாக மாட்டான்.

அவன் பிரம்மபந்துதான்; பிராமணர்களை உறவுக் காரர்களாக உடையவன்தான். அப்படியே க்ஷத்திரியன் காயத்ரீயை விட்டால் க்ஷத்திரிய பந்து வாகிறான்; வைசியன் வைசிய பந்துவாகிறான்.

ஆகையால் அந்த நெருப்புப் பொறியை ஊதிப் பெரிசு பண்ண வேண்டும். நெருப்புப் பொறி எதற்கும் உபயோகப்படாது. ஆனால் உபயோகப்படுமாறு பெரிசாக்குவதற்கு அதில் ஆதாரம் இருக்கிறது.

ஆகையால் ஞாயிற்றுக்கிழமையாவது பூணல் உள்ள வர்கள் ஆயிரம் காயத்ரி பண்ண வேண்டும். கண்ட இடத்தில் கண்ட ஆகாரத்தை உண்ணலாகாது.

இதுவரைக்கும் அநாசாரம் செய்ததற்குப் பிராயச்சித்தம் பண்ணிக்கொள்ள வேண்டும். இனியாவது கண்ட ஆகாரத்தை உண்ணாமல், மந்திர சக்தி இருப்பதற்கு தேகத்தைப் பரிசுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும்.

காலை ஸந்தி, மத்தியான வேளை, மாலை ஸந்தி என்ற ஒவ்வொரு காலத்திலும் பத்து காயத்ரீயாவது எத்தனை ஆப்த்துக் காலத்திலும் ஜபம் பண்ண வேண்டும். மூன்று காலமும் சாந்தம் உண்டாகிற காலம்.

காலையில் பக்ஷி முதலிய பிராணிகளும், மனிதர்களும் எழுந்திருக்கும் காலம். அப்பொழுது மனது சாந்தியாக இருக்கும்.

ஸாயங்காலம் எல்லோரும் வேலையை முடித்து ஓய்ந்திருக்கும் காலம். அதுவும் சாந்தமான காலம்.

மத்தியான்ன காலத்தில் சூரியன் உச்சில் இருக்கிறான். அப்பொழுது எல்லோரும் அயர்ந்திருக்கும் காலம். அப்பொழுதும் மனதுக்கு சாந்தமான காலம்.

இந்த மூன்று காலங்களிலும் காயத்ரீ, ஸாவித்ரீ, ஸரஸ்வதீ என்று மூன்று பிரகாரமாகத் தியானம் செய்ய வேண்டும்.

காலை விஷ்ணு பிரதானமானது. மத்யான்னம் பிரம்மப் பிரதானமானது. ஸாயங்காலம் சிவப்பிரதான மானது.

ஆகையால் காலையில் விஷ்ணு ரூபிணியாகவும், மத்யான்னம் பிரம்மரூபிணியாகவும், ஸாயங்காலம் சிவ ரூபிணியாகவும் தியானம் செய்ய வேண்டும்.

காயத்ரீயில் சகல வேத மந்திர சக்தியும் அடங்கியிருக்கிறது. மற்ற எல்லா மந்திரங்களுக்கும் சக்தியைக் கொடுப்பது அதுதான். அதை ஜபிக்காவிட்டால் வேறு மந்திர ஜபத்திற்குச் சக்தி இல்லை.

'ஹிப்நாடிஸம்' என்பதனால் பல காரியங்களைச் செய்கிறார்கள். மோக்ஷத்துக்குப்போக உதவும் ஹிப்நாடிஸம் காயத்ரீமந்திரம். ஆசையை அடக்கி ஜன்மம் எடுத்ததன் பலனை அடையச் செய்கிற ஹிப்நாடிஸம் காயத்ரீ.

லோக காரியங்களைக் குறைத்துக்கொண்டு, இந்தப் பொறியை ஊதுவதை அதிகமாகச் செய்ய வேண்டும். இதை ஒரு விரதமாக வைத்துக்கொள்ள வேண்டும். அநாசாரத்தில் போகாமல் தேகத்தை சுத்தமாக வைத்துக் கொண்டால்தான் அந்தப் பொறி அணையாமலிருக்கும்.

ஸந்தியாவந்தனத்தில் அர்க்கியமும், காயத்ரீயும் முக்கியமானவை. மற்றவைகளெல்லாம் அதற்கு அங்கமானவை. அசக்தர்களாயிருப்பவர்கள் அர்க்கியத்தைக் கொடுத்துவிட்டுப் பத்து காயத்ரீயாவது ஜபிக்க வேண்டும். 'அந்த இரண்டுதானே முக்கியம்? அவைகளை மட்டும் செய்து விடலாம்' என்றால் வரவர அவைகளுக்கு லோபம் வந்துவிடும்.

ஆபத்திலும் அசக்தியிலும் பத்து காயத்ரீ போதும் என்பதால் எப்போதும் இப்படிப் பத்தே பண்ணினால்,

அப்படிப் பண்ணுகிறவர்களுக்கு எப்போதும் ஆபத்தும் அசக்தியுமாகத்தான் இருக்கும் என்று ஒரு பண்டிதர் வேடிக்கையாகச் சொன்னார்.

ஆகையால் அங்கபுஷ்களத்தோடு எதுவும் குறைவின்றி செய்து வந்தால்தான் முக்கியமானது நன்றாக நிற்கும். ஆபத்துக்காலத்திலுங்கூட அவைகளைச் செய்து வரவேண்டும். காலம் தப்பாமல் செய்ய வேண்டும்.

பாரத யுத்தத்தின்போது ஜலம் அகப்படாதபோதுகூட தூளியை வைத்துக்கொண்டு காலம் தவறாமல் சேனா வீரர்கள் அர்க்கியம் கொடுத்தார்களென்று சொல்லப்பட்டிருக்கிறது.

அஸ்தமன காலத்திலும், உதயகாலத்துக்கு முன்பும், உச்சிக்காலத்திலும் அர்க்கியம் கொடுக்க வேண்டும்.

இடைக்காட்டுச் சித்தர் என்று ஒருவர் இருந்தார். அவர் ஆடு மேய்த்தார். அவர், ''காணாமற் கோணாமற் கண்டு கொடு ஆடுகாண் போகுது பார் போகுது பார்'' என்று சொல்லி இருக்கிறார்.

''காணாமல்'' என்றால் சூரியனைக் காண்பதற்கு முன்பு என்று அர்த்தம். அதாவது சூரியோதயத்திற்கு முன் காலை அர்க்கியம் கொடுக்க வேண்டும்.

''கோணாமல்'' என்பதற்கு சூரியன் தலைக்கு நேரே இருக்கும்போது என்பது அர்த்தம். அதாவது சூரியன் மேற்கே போவதற்கு முன் உச்சிக்காலத்தில் மாத்யான்னிக அர்க்கியம் கொடுக்க வேண்டும்.

''கண்டு'' என்பதற்கு சூரியன் இருக்கும்பொழுது என்பது அர்த்தம். சூரியன் அஸ்தமிப்பதற்கு முன்பு மலைவாயிலில் இருக்கும்பொழுதே ஸாயங்கால அர்க்கியம் கொடுக்க வேண்டும். இந்த விஷயங் களைதான் அந்த சித்தர் லேசாகச் சொல்லியிருக்கிறார்.

''ஆடு'' என்றால் ''நீராடு'' அதாவது ''கங்கையில் ஸ்நானம் பண்ணு'' என்பது அர்த்தம்.

'காண்' என்றால் 'ஸேது தரிசனம் பண்ணு' என்பது அர்த்தம்.

''போகுது பார்'' என்றால் ''கங்கா ஸ்நானத்தாலும் ஸேது தரிசனத்தாலும் நம் பாபம் தொலைந்து போகிறது. இதைப் பார்'' என்று அர்த்தம்.

காசிக்குப் போய் கங்கை நீர் எடுத்துக் கொண்டு, ஸேதுவான ராமேச்வரத்துக்குப் போய் ராமநாத ஸ்வாமிக்கு கங்காபிஷேகம் பண்ணும் சம்பிர தாயத்தைத்தான் சொல்லியிருக்கிறார்.

காயத்ரீயைச் சரியாகப் பண்ணினால்தான் மற்ற வேத மந்திரங்களிலும் சித்தி உண்டாகும். அர்க்யத்தையும், காயத்ரீயையும் தவறாமல் செய்துகொண்டு வரவேண் டும். ஜன்மத்தில் ஒரு தரமாவது கங்காஸ்நானமும், ஸேது தரிசனமும் பண்ணவேணும்.

ஒருவனுக்கு ரொம்பவும் ஜ்வரம் வந்தால், கூட இருக்கிறவர்கள் அவனுக்காக ஸந்தியா வந்தனம் பண்ணித் தீர்த்தத்தை ஜ்வரம் வந்தவர் வாயில் விடவேண்டும். இப்பொழுது நமக்கு நித்தியப்படி ஜ்வரம் வந்தது போலத்தான் இருக்கிறது!

ஜ்வரம் வந்தால் அதற்கு மருந்து அவசியம்; அதுபோல ஆத்மாவுக்கு உபயோகமான காயத்ரீயும் முக்கியமானது. அதை எந்தக் காலத்திலும் விடக் கூடாது. மருநதைவிட அதுதான முககியமானது. ஒரு நாளாவது ஸந்தியா வந்தனத்தை விட்டுவிட்டோ மென்று இருக்கக்கூடாது.

காயத்ரீஜபம் பண்ணுவது எல்லாராலும் ஆகிற காரியம்தான். இதிலே ஜலத்தைத் தவிர வேறு திரவியம் வேண்டாம். சரீர பிரயாசையும் இல்லை. லகுவாகப் பரம சிரேயஸைத் தரும் சாதனம். ஆயுள் இருக்கிற வரைக்கும் ஸந்தியாவந்தனத்துக்கு லோபம் வராமல் பண்ண வேண்டும்.

காயத்ரீயை மாத்ரு ரூபமாக (தாய் வடிவமாக) உபாஸிக்க வேண்டும்.

பகவான் பல விதமான ரூபங்களில் வந்து பக்தர் களுக்குக் கிருபை செய்கிறார். நம்மிடம் எல்லாரையும் விட அன்பாக இருப்பது மாதாதான். தாயாரிடம் எதை

வேண்டுமானாலும் பயமில்லாமல் சொல்லலாம்.

பகவான் எல்லா ரூபமாக இருந்தாலும் மாதா ரூபமாக வந்தால் ரொம்பவும் ஹிதமாக இருக்கிறது. காயத்ரீயை அப்படிப்பட்ட மாதாவென்று வேதம் சொல்லுகிறது.

புருஷனுக்குத்தான் காயத்ரீ இருக்கிறது. ஸ்திரீக்கு எந்த காயத்ரீ இருக்கிறதென்றால் புருஷன் காயத்ரீயை அனுஷ்டித்தாலே ஸ்திரீகளுக்கு க்ஷேமம் உண்டாகும்.

இதேபோல் காயத்ரீ ஜபத்துக்கு அதிகாரம் பெற்ற மூன்று வர்ணத்தாரும் அதை விடாமல் செய்வதாலேயே காயத்ரீயில் உரிமையில்லாத மற்ற ஜாதிகளுக்கும் க்ஷேமமுண்டாகும். தான் ஒன்றைச் செய்யாமலிருப்பதால் தனக்கு மட்டுமே நஷ்டம் என்றால் விட்டு விடலாம்; அதனால் பிறத்தியானுக்கும் நஷ்டம் என்றால் அப்படி விட முடியாது.



ஜெய ஜெய சங்கர !
ஹர ஹர சங்கர !!

காயத்ரீக்கு அதிகாரமில்லாத ஸ்திரீ, சூத்ரர்களுக்கும் Trustee (தர்மகர்த்தா) மாதிரி இந்த மந்திர சக்தியைப் பெற்றுத்தர வேண்டியவர்கள் இந்தக் கடமையைப் பண்ணாவிட்டால் அது பரிகாரமே இல்லாத தோஷ மாகும்.

பல வித மந்திரங்கள் இருக்கின்றன. அவைகளை ஜபம் பண்ணுவதற்கு முன்பு இன்ன இன்ன பலனை உத்தேசித்துப் பண்ணுகிறேன் என்று சொல்லுகிறோம். காயத்ரீ மந்திரத்தினுடைய பலன் சித்தசுத்திதான்; மன மாசு அகலுவதுதான். மற்ற மந்திரங்களால் உண்டாகிற பலன்களெல்லாம் கடைசியில் சித்த சுத்தி உண்டாகத்தான் இருக்கின்றன. அதுவே காயத்ரீக்கு நேரான பலன்; ஒரே பலன்.

இந்தக் காலத்தில் காலையிலும், சாயங்காலத்திலும் எல்லாரும் காலந் தவறாமல் ஸந்தியாவந்தனம் செய்யலாம்.

சீக்கிரம் ஆபீஸுக்குப் போக வேண்டியவர்கள் மத்யான்ன வேளையில் வீட்டிலிருக்க முடியாதாகை

யால், பிராதக் காலம் ஆனபின், அதாவது ஸூர்யோ தயத்திலிருந்து ஆறு நாழிகை (2 மணி 24 நிமிஷம்) கழித்து வரும் ஸங்கவ காலத்தில் மாத்தியான்னிக அர்க்கியத்தை கொடுத்து, ஜபிக்க வேண்டும்.

அதாவது நம்மால் அடியோடு முடியாமற் போனாலன்றி திரிகால ஸந்தியோபாஸனை இல்லா மல் இருக்கவே கூடாது. அடியோடு முடியாமல் ஜ்வரம் வந்தால் மற்றவர்களிடம் ''கஞ்சி கொடு, தீர்த்தம் கொடு'' என்று சொல்லுவதைப் போல, ''எனக்காக ஸந்தியாவந்தனம் பண்ணு'' என்று சொல்ல வேண்டும்.

பாபம், பொய் முதலியவை தொலைய வேண்டும். ஞான சூரியன் பிரகாசிக்க வேண்டும். அது பிரகாசிக் காமல் பண்ணிக்கொண்டு உள்ளே இருக்கிற பிரதி பந்தங்கள் (இடையூறுகள்) நிவர்த்தியாக வேண்டும் என்று அந்த அஸ்திரப் பிரயோகம் பண்ண வேண்டும்.

ஒவ்வொரு நாளும் மூன்று வேளை பண்ண வேண்டும். எந்தக் காரியம் பண்ணினாலும் பண்ணா விட்டாலும் மூச்சைப் பிடித்துக்கொண்டு இதைப் பண்ண வேண்டும்.

ஒரு காரியத்தை சிரத்தையாக ஒருவன் பண்ணினால் 'மூச்சைப் பிடித்துக்கொண்டு பண்ணுகிறான்' என்று சொல்லுகிறோம். வாஸ்தவத்தில் இந்தக் காரியத்தையே மூச்சைப் பிடித்துக் கொண்டு பண்ணவேண்டும்.

தினந்தோறும் இதைப் பண்ணி வந்தால் அந்த சத்ருக்கள் நாசமாய்ப் போய்விடுவார்கள். இது பண்ணுவதற்கு முதலில் மூச்சைப் பிடித்துக் கொள்ள வேண்டும். அதாவது சுவாசத்தை அடக்க வேண்டும்.

இப்பொழுது நாம் மூக்கை மட்டும்தான் பிடிக்கிறோம். சாஸ்திரத்தில் 'நாஸிகாம் (மூக்கை) ஆயம்ய' என்று சொல்லவில்லை. 'ப்ராணான் மூச்சை ஆயம்ய' என்றுதான் சொல்லியிருக்கிறது. அதாவது வெறுமே மூக்கைப் பிடிக்காமல் பிராணனையே கட்டுப்பாட்டில் கொண்டு வரவேண்டும்.

எந்தக் காரியம் பண்ணினாலும் மனது ஒருமைப்பட வேண்டும். ஜலத்தைக் கொண்டு அஸ்திரப் பிரயோகம் செய்வதற்கும் மனது ஒருமைப்பட வேண்டும். அதற்காகத்தான் மூச்சைப் பிடிக்க வேண்டும்.

மூச்சைப் பிடித்தால் மனது எப்படி நிற்கும்? என்று கேட்கலாம். மனது நிற்கிறபொழுது மூச்சு நிற்பதைப் பார்க்கிறோமே! பெரிய ஆச்சரியம் உண்டாகிறது, பெரிய துன்பம் வருகிறது, பெரிய சந்தோஷம் ஏற்படுகிறது என்று வைத்துக் கொள்வோம்.

அப்பொழுது மனது லயித்துப்போய் ஏகாந்தமாக நிற்கிறது. 'ஹா!' என்று கொஞ்ச நேரம் மூச்சு நின்று போய்விடுகிறது. அப்புறம் வேகமாக ஓடுகிறது. நாமாக அதை நிறுத்தவில்லை; அது தானாக நிற்கிறது. மனது ஒன்றிலே நன்றாக ஈடுபட்டவுடன் நின்று விடுகிறது. பின்பு பெருமூச்சு விடுகிறோம். எதற்காக? முன்பு விடாத மூச்சையும் சேர்த்து விடுகிறோம். அதாவது மனது ஒருமைப்படுகிறபோது மூச்சு நிற்கிறது. எனவே மூச்சு நின்றால் மனது ஒருமைப் படும் என்று தெரிகிறதல்லவா? இதற்காகத்தான் பிராணாயாமத்தால் மூச்சை இறுக்கி, அர்க்யம் தருவது.

நாம் அர்க்கியம் விடும்போது சித்த ஐகாக்கிரியத் தோடு (மன ஒருமைப்பாட்டோடு) விடவேண்டும்.

பிராணாயாமம் பண்ணினால் சித்தைகாக்கிரியம் உண்டாகும். அதை நிறையப் பண்ணுவது யோகத்திற்கு அவசியம். இப்படி நிறையப் பண்ணுவது கஷ்ட மானது; உபதேசத்தின்படி செய்ய வேண்டியது.

நாம் ஸந்தியாவந்தனத்தில் பத்துத் தடவைகள்தான் பண்ணுகிறோம். மூன்று பண்ணு என்று சிலவற்றிற்கு நியமம் ஏற்பட்டிருக்கிறது. சிறு வயதில் உபநயனமான காலம் முதற்கொண்டு கிரமமாக நாம் வேளைக்குப் பத்துப் பிராணாயாமம் பண்ணிக்கொண்டு வந்திருந் தாலே, இத்தனை நாளில் யோகீசுவரராக ஆகியிருப் போம். பண்ணுகிறதைச் சரியாகப் பண்ண வேண்டு மல்லவா?

அரை நிமிஷம் சுவாஸத்தை நிற்கப் பண்ண வேண்டும். அதிகமாக வேண்டாம். பிராணன் நின்றால் மனது நிற்கும். அந்த நிலையில் அர்க்யம் கொடுத்தால் வாஸ்தவமாகக் கெட்ட அஸுர சக்திகள் ஓடிப்போகும். மனஸ் நின்றால் நாம் விடுகிற ஜலம் அஸ்திரமாகும்.

அர்க்கியமாகிய அஸ்திரப் பிரயோகத்தைப் பண்ண வேண்டும். பின்பு காயத்ரீ பண்ண வேண்டும்.

பிராணாயாமத்தை கூடிய வரையில் பண்ண வேண்டும். மூச்சைக் கொஞ்சம் நிறுத்துகிறது, பின்பு விடுகிறது என்ற அளவில் இருந்தாலே போதும், அதிகம் அடக்க வேண்டாம். சங்கல்பம், மார்ஜனம், பிராசனம், அர்க்கியப் பிரதானம், ஜபம், ஸ்தோத்திரம், அபிவாதனம் இவ்வளவும் பரமேசுவரனுடைய அநுக்கிரஹம் பெறுவதற்காகப் பண்ணுகிறேனென்று சொல்லிச் செய்ய வேண்டும்.

முதலில் பண்ணும் சங்கல்பம் என்பது அதுதான். ஆரம்ப முதல் கடைசி வரையில் பரமேசுவரார்ப்பணம் பண்ண வேண்டும். இவ்வளவுக்கும் பிராணாயாமம் முக்கிய அங்கம். திரிகாலங்களிலும் இதை சொல்ப மாவது பண்ணவேண்டும்.

தினந்தோறும் மூன்று வேளையும் ரோகிஷ்டன் (நோயாளி) கூடப் பிராணாயாமம் பண்ண வேண்டும் என்று சாஸ்திரத்தில் இருப்பதால் உபத்திரவம் கொடுக்கிற அளவுக்கு இதில் சுவாஸக் கட்டுப்பாடு இல்லை என்று புரியும். இப்படிப் பண்ணினாலே ரோகமும் போய் தீர்க்காயுஸூம் உண்டாகும்.

ரிஷயோ தீர்க்க ஸந்த்யத்வாத் தீர்க்கமாயுரவாப்நுயு: ।
ப்ரக்ஞாம் யசச்ச கீர்த்திம் ச ப்ரஹ்ம வர்சஸமேவ ச ॥
(மநுஸ்மிருதி, 4-94)

அபிவாதனத்தில் எந்த மஹரிஷியினுடைய ஸந்ததியில் பிறந்திருக்கிறோம் என்று சொல்கிறோமோ அந்த மகரிஷி முதல் காயத்ரீ ஜபிக்கப்பட்டு வருகிறது. அந்த கோத்திரத்தில் பிறந்ததற்காவது கர்மானுஷ்டானங்களைச் செய்ய வேண்டியது நமது கடமை.

அந்த முதல் ரிஷிக்கு அப்புறம் எவ்வளவோ பேர் ரிஷிகளாக இருந்திருக்கிறார்கள். திரயார்ஷேயமம், பஞ்சார்ஷேயம், ஏகார்ஷேயம் என்று சொல்லுகிறார்கள். அதாவது அந்த கோத்திரத்தில் மூன்று ரிஷிகளோ, ஐந்து ரிஷிகளோ, ஒரு ரிஷியோ இருந்திருக்கிறார்கள் என்று இதனால் தெரியவருகிறது.

அவர்கள் அப்படி தீர்க்காயுஸ், ஞானம், புகழ், பிரம்மதேஜஸ் முதலியவையுள்ள ரிஷிகளாக ஆனதற்குக் காரணம் அவர்கள் செய்த சந்தியாவந்தனம்தான் என்பது நான் சொன்ன மநுஸ்மிருதி சுலோகத்தின் அர்த்தம்.

தொடர்ச்சியாக வந்த இந்த தாரையை நாம் அறுத்து விடக்கூடாது. பிராணாயாமத்தோடு சித்தைகாக்கிரியத் தோடு மந்திர லோப மில்லாமல் பரமேசுவரார்ப் பணமாக ஸந்தியாவந்தனத்தை நிறுத்தி நிதானமாகப் பண்ண வேண்டும். பக்தி சிரத்தையோடு பண்ண வேண்டும். அர்த்தத்தைத் தெரிந்துகொண்டு பண்ண வேண்டும்.

மனோ-வாக்-காயங்களால் பாபம் பண்ணியிருக் கிறோம். அந்த மூன்றாலும் செய்யும் கர்மாக்களால் அந்தப் பாபத்தைப் போக்கிக் கொள்ளவேண்டுமென்று முன்பு சொல்லியிருக்கிறேன்.

ஸந்தியாவந்தனத்தில், வாக்கினால் மந்திரம் சொல்லுகிறோம்; காயத்ரீ ஜபத்தை மனதினால் தியா னித்துப் பண்ணுகிறோம்; மார்ஜனம் (புரோக்ஷித்துக் கொள்வது) முதலியவைகளால் காயசுத்தி உண்டா கிறது.

இவைகளைத் தவிர கர்மயோக, பக்தியோக, ஞான யோக ரூபமாகவும் ஸந்தியாவந்தனம் இருக்கிறது.

ஸந்தியாவந்தனம் பண்ண அவரவர்கள் தங்கள் தங்களுக்கென்று பாத்திரம் வைத்துக்கொள்ள வேண்டும். ஸந்தியாவந்தனத்தை அவஸரமாகப் பண்ணக் கூடாது என்பது முக்கியம்.



## ஸ்ரீ குரு காயத்ரீ

ஓம் குரு தேவாய வித்மஹே பரம குருப்யோ தீமஹி
தந்நோ குரு ப்ரசோதயாத்

# ஸ்ரீ காயத்ரீ

1) பிரம்ம காயத்ரீ

ஓம் பூர்பவஸ்வ : ஓம் தத்ஸவிதுர்வரேண்யம்
ஓம் பர்கோ தேவஸ்ய தீமஹி
தியோ யோந: ப்ரசோத யாத்

2) ஸ்ரீ ராம காயத்ரீ

ஓம் தாசரதாய வித்மஹே சீதா வல்லபாய தீமஹி
தந்நோ ராம; ப்ரசோதயாத்

3) ஸ்ரீ நாராயண காயத்ரீ

ஓம் நாராயணாய வித்மஹே வாசுதேவாய தீம ஹி
தந்தோ நாராயண; ப்ரசோதயாத்

4) ஸ்ரீ ருத்ர காயத்ரீ

ஓம் தத் புருஷாய வித்மஹே மஹாதேவாய தீமஹி

தந்நோ ருத்ர ப்ரசோதயாத்

5) ஸ்ரீ மகாலக்ஷ்மீ காயத்ரீ

ஓம் லக்ஷ்மீர் பூர்புவ: லக்ஷ்மீ ஸ்வ: காலகம்
தந்நோ மகாலக்ஷ்மீ ப்ரசோதயாத்

6) ஸ்ரீ நரசிம்ஹ காயத்ரீ

ஓம் உக்ர நரசிம்ஹாய வித்மஹே வஜ்ர நகாய தீமஹி

தந்நோ நரசிம்ஹ; ப்ரசோதயாத்

7) ஸ்ரீ லக்ஷ்மண காயத்ரீ

ஓம் தாசரதாய வித்மஹே அலவேலாய தீமஹி
தந்நோ லக்ஷ்மண பிரசோதயாத்

8) கிருஷ்ண காயத்ரீ

ஓம் தேவகீ நந்தனாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி
தந்நோ கிருஷ்ண பிரசோதயாத்

9) ஸ்ரீ கோபால காயத்ரீ

ஓம் கோபாலாய வித்மஹே கோபீஜனவல்லபாய தீமஹி
தந்நோ கோபால ப்ரசோதயாத்

10) ஸ்ரீ பரசுராம காயத்ரீ

ஓம் ஜாமதக்நாய வித்மஹே மஹாவீராய தீமஹி
தந்நோ பரசுராம ப்ரசோதயாத்

11) ஸ்ரீ துளஸீ காயத்ரீ

ஓம் துளஸீயாய வித்மஹே திரிபுராரீராய தீமஹி
தந்நோ துளஸீ ப்ரசோதயாத்

12) ஸ்ரீ ஹனுமத் காயத்ரீ

ஓம் அஞ்ஜனீ சுதாய வித்மஹே வாயு புத்ராய தீமஹி
தந்நோ ஹநுமன் ப்ரசோதயாத்

13) ஸ்ரீ கருட காயத்ரீ

ஓம் தத் புருஷாய வித்மஹே ஸவர்ணபக்ஷாய தீமஹி
தந்நோ கருட ப்ரசோதயாத்

14) ஸ்ரீ அக்னி காயத்ரீ

ஓம் மஹாஜ்வாலாய வித்மஹே அக்னிமக்னயாய தீமஹீ

தந்நோ அக்னி ப்ரசோதயாத்

15) ஸ்ரீ பிருத்வீ காயத்ரீ

ஓம் ப்ருத்வீ தேவ்யை வித்மஹே சஹஸ்ர மூர்த்தயே தீமஹி

தந்நோ பிருத்வீ ப்ரசோதயாத்

16) ஸ்ரீ ஜல காயத்ரீ

ஓம் ஜலபிம்பாய வித்மஹே நீல புருஷாய தீமஹி
தந்நோ அம்பு ப்ரசோதயாத்

### 17) ஆகாச காயத்ரீ

ஓம் ஆகாசாய வித்மஹே நபோ தேவாய தீமஹி
தந்நோ ககனம் ப்ரசோதயாத்

### 18) ஸ்ரீ சூரிய காயத்ரீ

ஓம் பாஸ்கராய வித்மஹே திவாகராய தீமஹி
தந்நோ சூரிய ப்ரசோதயாத்

### 19) ஸ்ரீ சந்திர காயத்ரீ

ஓம் க்ஷீரபுத்ராய வித்மஹே அம்ருதயாய தீமஹி
தந்நோ சந்திர ப்ரசோதயாத்

### 20) ஸ்ரீ குரு காயத்ரீ

ஓம் பரவரசா (பராவரேசா)ய வித்மஹே
குருவ்யக்தாய தீமஹி
தந்நோ குரு ப்ரசோதயாத்

### 21) ஸ்ரீ பவன காயத்ரீ (வாயு காயத்ரீ)

ஓம் பவன புருஷாய வித்மஹே சஹஸ்ர மூர்த்தயே
தீமஹி
தந்நோ வாயு: ப்ரசோதயாத்

22) ஸ்ரீ ஹம்ச காயத்ரீ

ஓம் பரமஹம்சாய வித்மஹே மஹாஹம்சாய தீமஹீ
தந்நோ ஹம்ச ப்ரசோதயாத்

23) ஸ்ரீ கௌரீ காயத்ரீ

ஓம் ஸுபகாயை வித்மஹே காமமாலின்யை தீமஹி
தந்நோ கௌரீ ப்ரசோதயாத்

24) ஸ்ரீ தேவீ காயத்ரீ

ஓம் தேவ்யை பிரம்மாண்யை வித்மஹே
சக்த்யை ச தீமஹீ
தந்நோ தேவீ ப்ரசோதயாத்

25) ஸ்ரீ கர்த்ர சியாம காயத்ரீ

ஓம் கர்த்ர ஸ்கந்தாய வித்மஹே
கத்ர ச்யாமாயா தீமஹி
தந்நோ கத்ர ச்யாம: ப்ரசோதயாத்

26) ஸ்ரீ விஷ்ணு காயத்ரீ

ஓம் விஷ்ணு தேவாய வித்மஹே
வாஸு தேவாய தீமஹி
தந்நோ விஷ்ணு ப்ரசோதயாத்

### 27) ஸ்ரீ பைரவ காயத்ரீ

ஓம் திகம்பராய வித்மஹே (தீர்கஸிஷ்ணாய) தீமஹி
தந்நோ பைரவ ப்ரசோதயாத்

### 28) ஸ்ரீ நாராயண காயத்ரீ

ஓம் நாராயணாய வித்மஹே
வாசுதேவாய தீமஹி
தந்நோ விஷ்ணு ப்ரசோதயாத்

### 29) ஸ்ரீ கணேச காயத்ரீ

ஓம் வக்ரதுண்டாய வித்மஹே
லம் போதராய தீமஹி
தந்நோ தந்தி ப்ரசோதயாத்

### 30) ஸ்ரீ ருத்ர காயத்ரீ

ஓம் தத்புருஷாய வித்மஹே
மஹாதேவாய தீமஹி
தந்நோ ருத்ர ப்ரசோதயாத்

### 31) ஸ்ரீ துர்கா காயத்ரீ

ஓம் காத்யாநீய வித்மஹே
கன்யாகுமார்யை தீமஹி
தந்நோ துர்க ப்ரசோதயாத்

32) ஸ்ரீ சூரிய காயத்ரீ

ஓம் பாஸ்கராய வித்மஹே
மஹாத்யோத ஸ்சக்ராய தீமஹி
தந்நோ சூரிய ப்ரசோதயாத்

33) ஸ்ரீ நரசிம்ஹ காயத்ரீ

ஓம் வஜ்ரநகாய வித்மஹே தீக்ஷண தம்ஷ்ட்ராய தீமஹி
தந்நோ நரசிம்ஹ ப்ரசோதயாத்

34) ஸ்ரீ கருட காயத்ரீ

ஓம் தாக்ஷ புத்ராய வித்மஹே
தனாயு புத்ராய தீமஹி
தந்நோ கருட ப்ரசோதயாத்

35) ஸ்ரீ அக்னி காயத்ரீ

ஓம் லாலீலாய வித்மஹே வைச்வானராய தீமஹி
தந்நோ அக்னி ப்ரசோதயாத்

36) ஸ்ரீ ஹிரண்யகர்ப காயத்ரீ

ஓம் வேதாத்மனாய வித்மஹே
ஹிரண்ய கர்பாய தீமஹி
தந்நோ ப்ரம்ம ப்ரசோதயாத்

37) ஸ்ரீ பிருத்வீ காயத்ரீ

ஓம் ப்ருத்வீ தேவ்யை ச வித்மஹே
வசுந்தராய ச தீமஹி
தந்நோ ப்ருத்வீ ப்ரசோதயாத்

38) ஸ்ரீ வாயு காயத்ரீ

ஓம் வித்யாத்மநாய வித்மஹே மஹிஸ்யஸரூபாய திமஹி
தந்நோ வாயு ப்ரசோதயாத்

39) ஸ்ரீ ஜல காயத்ரீ

ஓம் ஜீவ தேவாய வித்மஹே
கந்தர்ப்ப கலாயை தீமஹி
தந்நோ ஜலம் ப்ரசோதயாத்

40) ஸ்ரீ ஆகாச காயத்ரீ

ஓம் ஷே(ஹம்) வியபகாய வித்மஹே
ககனாய தீமஹி
தந்நோ ஆகாச ப்ரசோதயாத்

41) ஸ்ரீ ஸரஸ்வதீ காயத்ரீ

ஓம் யே யே (ஐம்) ஸர்வபிரியவாக் வித்மஹே
ப்ரீம் வாகீச்வரி தீமஹி
தந்நோ சக்தி ப்ரசோதயாத்

42) ஸ்ரீ தத்தாத்ரேய காயத்ரீ

ஓம் தத்தாத்ரேயாய வித்மஹே திகம்பராய தீமஹி
தந்நோ தத்த ப்ரசோதயாத்

43) ஸ்ரீ சண்டீ காயத்ரீ

ஓம் சண்டீசுவரி சவித்மஹே மஹாதேவீச ச தீமஹி
தந்நோ சண்டீ ப்ரசோதயாத்

44) ஸ்ரீ பசு(பதி) காயத்ரீ

ஓம் பசுபதயே வித்மஹே மஹாதேவாய தீமஹி
தந்நோ பசுய ப்ரசோதயாத்

45) ஸ்ரீ குரு காயத்ரீ

ஓம் குரு தேவாய வித்மஹே பரம குருப்யோ தீமஹி
தந்நோ குரு ப்ரசோதயாத்

46) ஸ்ரீ பரமஹம்ஸ காயத்ரீ

ஓம் பரமஹம்ஸாய வித்மஹே
மஹாஹம்ஸாய தீமஹி
தந்நோ ஹம்ஸ ப்ரசோதயாத்

47) ஸ்ரீ கௌரீ பரமஹம்ஸ காயத்ரீ

ஓம் ஸோஅஹம் ஹம்ஸ: பரமஹம்ஸ
தத்வமஸி அஹம் ப்ரம்மாஸ்மி
ஸோஅஹம் ப்ரம்மாஹம்

48) ஸ்ரீ பரமஹம்ஸ காயத்ரீ (வேறுவிதம்)

ஓம் ஹம்ஸ ஹம்ஸாய வித்மஹே,
ஸோஅஹம் ஹம்ஸாய தீமஹி
ஹம்ஸ : ஸோஅஹம் ப்ரசோதயாத் ॥

49) ஸ்ரீ ஸச்சிதானந்த பரமஹம்ஸ காயத்ரீ

ஓம் ஹம்ஸோ ஹம்ஸ: பரமாத்மா சின்மய:
ஸச்சிதானந்த ஸ்வரூப ஸோஅஹம் ப்ரம்ஹ ஓம்

50) ஸ்ரீ ப்ரம்ம காயத்ரீ

ஓம் பூர்புவஸ்ஸுவ தத்ஸவிதுர்வரேண்யம்
பர்கோதேவஸ்ய தீமஹி
தியோ யோ ந: ப்ரசோதயாத்

51) ஸ்ரீ ப்ரம்ம காயத்ரீ (இது ஒருவகை)

ஓம் பூ: ஓம் புவ: ஓம் ஸ்வ: ஓம் மஹ
ஓம் ஜன: ஓம் தப: ஓம் ஸத்யம் ஓம்
தத்ஸவிதுர்வரேண்யம்
பர்கோ தேவஸ்ய தீமஹி
தியோ யோ ந: ப்ரசோதயாத்

52) ஸ்ரீ சனைஸ்சர காயத்ரீ

ஓம் வைவஸ்வதாய வித்மஹே
பங்குபாதாய தீமஹி
தந்நோ மந்த: ப்ரசோதயாத்

53) ஸ்ரீ காமதேனு காயத்ரீ

ஓம் ஸுபுகாயை வித்மஹே
காமதாத்ர்யை ச தீமஹி
தந்நோ தேனு: ப்ரசோதயாத்

54) ஸ்ரீ லக்ஷ்மீ காயத்ரீ (வேறு)

ஓம் மஹாலக்ஷ்மீ ச வித்மஹே
விஷ்ணுபத்னீ ச தீமஹி,
தந்நோ லக்ஷ்மீ: ப்ரசோதயாத்

# ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய புஜங்கம்

ஸ்ரீ ஆதிசங்கராசார்யாளால் இயற்றப்பட்ட இந்த ஸ்தோத்திரத்தைப் படிப்பதால் மஹாரோகங்கள் விலகும். தீர்காயுள், ஸம்பத்து, ஆரோக்யம், வைராக்யம், மோக்ஷம், ஞானம் சந்தானம் உண்டாகும். மனக்கவலை நீங்கும், வறுமை விலகும். செவ்வாய் தோஷம் விலகும்.

ஸதா பாலரூபாபி விக்நாத்ரி ஹந்த்ரீ
மஹாதந்தி வக்த்ராபி பஞ்சாஸ்ய மாந்யா |
விதீந்த்ராதி ம்ருக்யா கணேசாபி தாமே
விதத்தாம் ச்ரியம் காபி கல்யாணமூர்த்தி; || 1

ந ஜாநாமி சப்தம் ந ஜாநாமி சார்த்தம்
ந ஜாநாமி பத்யம் ந ஜாநாமி கத்யம் |
சிதேகா ஷடாஸ்யா ஹ்ருதி த்யோததே மே
முகாந்நிஸ் ஸரந்தே கிரச்சாபி சித்ரம் || 2

மயூராதிரூடம் மஹாவாக்யகூடம்
மனோஹாரிதேஹம் மஹச்சித்தகேஹம் |
மஹீதேவதேவம் மஹாவேதபாவம்
மஹாதேவபாலம் பஜே லோகபாலம் || 3

யதா ஸந்நிதானம் கதா மானவா மே
பவாம்போதிபாரம் கதாஸ்தே ததைவ |
இதி வ்யஞ்ஜயந்ஸிந்துதீரே ய ஆஸ்தே !
தமீடே பவித்ரம் பராசக்திபுத்ரம் || 4

யதாப்தேஸ்தரங்கா லயம் யாந்திதுங்கா :
ததைவாபத: ஸந்நிதௌ ஸேவதாம் மே |
இதீவோர்மிபங்க்தீர்ந்ருணாம் தர்சயந்தம்
ஸதா பாவயே ஹ்ருத்ஸரோஜே குஹம் தம் || 5

கிரௌ மந்நிவாஸே நரா யேSதிரூடா
ததா பர்வதே ராஜதே தேSதிரூடா |
இதீவப்ருவன் கந்தசைலாதிரூட:
ஸ தேவோ முதே மே ஸதா ஷண்முகோஸ்து || 6

மஹாம்போதிதீரே மஹாபாபசோரே
முனீந்த்ரானுகூலே ஸுகந்தாக்யசைலே |
குஹாயாம் வஸந்தம் ஸ்வபாஸா லஸந்தம்
ஜநார்த்திம் ஹரந்தம் ச்ரயாமோ குஹம் தம் || 7

லஸத்ஸ்வர்ணகேஹே ந்ருணாம் காமதோஹே
ஸுமஸ்தோமஸஞ்சந்நமாணிக்ய மஞ்சே |
ஸமுத்யத்ஸஹஸ்ரார்க்க துல்யப்ரகாசம்
ஸதா பாவயே கார்த்திகேயம் ஸுரேசம் || 8

ரணத்தம்ஸகே மஞ்ஜுலேSத்யந்த சோணே
மனோஹாரி லாவண்ய பீயூஷபூர்ணே |
மந: ஷட்பதோ மே பவக்லேசதப்த:
ஸதா மோததாம் ஸ்கந்த தே பாதபத்மே || 9

ஸுவர்ணாப திவ்யாம்பரைர் பாஸமாநாம்
க்வணத் கிங்கிணீ மேகலா சோபமாநாம் |
லஸத்தேம பட்டேந வித்யோதமாநாம்
கடிம் பாவயே ஸ்கந்த தே தீப்யமாநாம் || 10

புளிந்தேச கந்யா கநா போகதுங்க
ஸ்தநா லிங்கநாஸக்த காச்மீர ராகம் |
நமஸ்யாம்யஹம் தாரகாரே தவோர:
ஸ்வபக்தாவநே ஸர்வதா ஸாநுராகம் || 11

விதௌ க்லுப்த தண்டாந்ஸ்வலீலாத்ருதாண்டாந்
நிரஸ்தேப சுண்டாந் த்விஷத் கால தண்டாந் |
ஹதேந்த்ராரி ஷண்டாந் ஜகத்ராண சௌண்டாந்
ஸதா தே ப்ரசண்டாந் ச்ரயே பாஹு தண்டாந் || 12

ஸதா சாரதா: ஷண் ம்ருகாங்கா யதி ஸ்யு:
ஸமுத்யந்த ஏவ ஸ்த்திதாச் சேத் ஸமந்தாத் |
ஸதா பூர்ணபிம்பா: கலங்கைச்ச ஹீநா:
ததா த்வந்முகாநாம் ப்ருவே ஸ்கந்த ஸாம்யம் || 13

ஸ்புரந்மந்த ஹாஸை: ஸஹம்ஸாநி ஸஞ்சத்
கடாக்ஷாவளீ ப்ருங்க ஸங்கோஜ் ஜ்வலாநி |
ஸுதாஸ்யந்தி பிம்பா தராணீச ஸூநோ
தவாலோகயே ஷண்முகாம்போருஹாணி || 14

விசாலேஷு கர்ணாந்த தீர்க்கேஷ்வஜஸ்ரம்
தயா ஸ்யந்திஷு த்வாதச ஸ்வீக்ஷணேஷு |
மயீஷத் கடாக்ஷ: ஸக்ருத் பாதிதச்சேத்
பவேத்தே தயாசீல கா நாம ஹானி || 15

ஸுதாங்கோத்பவோ மேஸி ஜீவேதி ஷட்தா
ஜபன்மந்த்ரமீசோ முதா ஜிக்ரதே யான் |
ஜகத்பாரப்ருத்ப்யோ ஜகந்நாத தேப்ய:
கிரீடோஜ்ஜ்வலேப்யோ நமோ மஸ்தகேப்ய: || 16

ஸ்புரத் ரத்ன கேயூர ஹாராபிராம:
ச்சலத் குண்டல ஸ்ரீலஸத் கண்டபாக: |
கடௌ பீதவாஸா: கரே சாருசக்தி:
புரஸ்தான் மமாஸ்தாம் புராரேஸ்தனூஜ: || 17

இஹாயாஹி வத்ஸேதி ஹஸ்தாந் ப்ரஸார்யா
ஹ்வயத்யா தராச் சங்கரே மாதுரங்காத் |
ஸமுத்பத்ய தாதம் ச்ரயந்தம் குமாரம்
ஹராச்லிஷ்ட காத்ரம் பஜே பாலமூர்த்திம் || 18

குமாரேச ஸூனோ குஹ ஸ்கந்த ஸேநா
பதே சக்திபாணே மயூராதி ரூட |
புளிந்தாத்மஜா காந்த பக்தார்திஹாரிந்
ப்ரபோ தாரகாரே ஸதா ரக்ஷ மாம் த்வம் || 19

ப்ரசாந்தேந்த்ரியே நஷ்டஸம்ஜ்ஞே விசேஷ்ட
கபோத்காரி வக்த்ரே பயோத்கம்பி காத்ரே |
ப்ரயாணோந்முகே மய்யநாதே ததாநீம்
த்ருதம் மே தயாளோ பவாக்ரே குஹ த்வம் || 20

க்ருதாந்தஸ்ய தூதேஷு சண்டேஷு கோபாத்
தஹ ச்சிந்தி பிந்தீதி மாம் தர்ஜயத்ஸு |
மயூரம் ஸமாருஹ்ய மா பீரிதி த்வம்
புரச்சக்தி பாணிர் மமாயாஹி சீக்ரம் || 21

ப்ரணம்யாஸக்ருத் பாதயோஸ்தே பதித்வா
ப்ரஸாத்ய ப்ரபோ ப்ரார்த்தயேSநேகவாரம் |
ந வக்தும் க்ஷமோஹம் ததாநீம் க்ருபாப்தே
ந கார்யாந்த காலே மனாகப்யுபேக்ஷா || 22

ஸஹஸ்ராண்ட போக்தா த்வயா சூர நாமா
ஹதஸ்தாரகஸ் ஸிம்ஹவக்த்ரச்ச தைத்ய: |
மமாந்தர் ஹ்ருதிஸ்தம் மந: க்லேச மேகம்
ந ஹம்ஸி ப்ரபோ கிம் கரோமி க்வ யாமி || 23

அஹம் ஸர்வதா துக்க பாராவஸந்நோ
பவாந் தீநபந்துஸ் த்வதந்யம் ந யாசே |
பவத் பக்தி ரோதம் ஸதாக்லுப்தபாதம்
மமாதிம் த்ருதம் நாசயோமாஸுத த்வம் || 24

அபஸ்மார குஷ்ட்ட க்ஷயார்ச: ப்ரமேஹ
ஜ்வரோந்மாத குல்மாதி ரோகாமஹாந்த: |
பிசாசாச்ச ஸர்வே பவத் பத்ர பூதிம்
விலோக்ய க்ஷணாத் தாரகாரே த்ரவந்தே || 25

த்ருசி ஸ்கந்தமூர்த்தி: ச்ருதௌ ஸ்கந்த கீர்த்தி:
முகே மே பவித்ரம் ஸதா தச்சரித்ரம் |
கரே தஸ்ய க்ருத்யம் வபுஸ்தஸ்ய ப்ருத்யம்
குஹே ஸந்து லீநா மமாசேஷ பாவா: || 26

முனீநாமுதாஹோ ந்ருணாம் பக்திபாஜாம்
அபீஷ்டப்ரதா: ஸந்தி ஸர்வத்ர தேவா: |
ந்ருணாமந்த்யஜானாமபி ஸ்வார்த்ததானே
குஹாத் தைவமந்யம் ந ஜானே ந ஜானே || 27

களத்ரம் ஸுதா பந்துவர்க: பசுர்வா
நரோ வாத நாரீ க்ருஹே யே மதீயா: |
யஜந்தோ நமந்த: ஸ்துவந்தோ பவந்தம்
ஸ்மரந்தச்ச தே சந்து ஸர்வே குமார || 28

ம்ருகா: பக்ஷிணோ தம்சகா யே ச துஷ்டா:
ததா வ்யாதயோ பாதகா யே மதங்கே |
பவச் சக்தி தீக்ஷ்ணாக்ர பின்னாஸ் ஸுதூரே
விநச்யந்து தே சூர்ணித் க்ரௌஞ்சசைல || 29

ஜநித்ரீ பிதா ச ஸ்வபுத்ராபராதம்
ஸஹேதே ந கிம் தேவஸேநாதி நாத |
அஹம் சாதிபாலோ பவான் லோகதாத:
க்ஷமஸ்வாபராதம் ஸமஸ்தம் மஹேச || 30

நம: கேகினே சக்தயே சாபி துப்யம்
நமச்சாக துப்யம் நம: குக்குடாய |
நம: ஸிந்தவே ஸிந்து தேசாய துப்யம்
புனஸ்ஸ்கந்த மூர்த்தே நமஸ்தே நமோஸ்து || 31

ஜயாநந்த பூமந் ஜயாபாரதாமந்
ஜயா மோஹ கீர்த்தே ஜயாநந்த மூர்த்தே |
ஜயானந்த ஸிந்தோ ஜயாசேஷ பந்தோ
ஜய த்வம் ஸதா முகதி தாநேச ஸூநோ || 32

புஜங்காக்ய வ்ருத்தேந க்லுப்தம் ஸ்தவம் ய:
படேத் பக்தியுக்தோ குஹம் ஸம்ப்ரணம்ய |
ஸ புத்ராந் களத்ரம் தனம் தீர்க்கமாயு:
லபேத் ஸ்கந்த ஸாயுஜ்யமந்தே நரஸ்ஸ: || 33





ஓம் பூர்புவஸ்ஸுவ தத்ஸவிதுர் வரேண்யம் பர்கோ
தேவஸ்ய தீமஹி தியோயோன ப்ரசோதயாத்

- ப்ரம்மகாயத்ரீ



"எந்தரோ மஹாநு பாவுலு அந்தரிகி மாவந்தனமுலு"

எங்களது சகஸ்ர சத தச ஏக (1111) கோடி நமஸ்காரங்கள்

**With best compliments from**

Mrs. **Krithika Arun** & Mr. **Arun Mani**

Masters **Abinav Arun Mani, Abishek Arun Mani**